பலி, விரும்பி தன்னிடம் வரும் எவரையும் பரிசுத்த தேவனோடு தொடர்புகொள்ளச் செய்யும் என்று கூறினார். (4) தனது பலியைத் தவிர மனித பாவத்திற்கு வேறெந்த பலியும் தேவையில்லையெனக் கூறினார். (5) எல்லா மக்களும் சமமென்றும், நமது அயலகத்தாரிடம் அன்பு கொள்ள வேண்டுமென்றும் போதித்தார். மற்றவர்கள் உனக்கென்ன செய்யவேண்டுமென எண்ணுகிறாயோ அதையே நீ மற்றவருக்கும் செய்ய வேண்டும் என்றார் (6) தனது விரோதிகளை மன்னித்து இயேசுநாதர் இறந்தார். தன்னைப் பின்பற்றுகிறவர்களும் அவ்விதம் செய்ய வேண்டுமெனக் கற்பித்தார். அவர்களுக்கு வாஞ்சையிருந்தால் அவர்களும் அவ்விதம் செய்ய வல்லமையை அளிப்பார். (7) இயேசுநாதர் சொன்னது தீமைக்குப் பதிலாகத் தீமை செய்யக் கூடாது; தீமையை நன்மையால்தான் வெல்லலாம். (8) தன்னைப் பின்பற்றுகிறவர்களுக்கும் துன்பத்திலிருந்தும் துன்புறுத்துதலிலிருந்தும் பாதுகாப்பு அளிப்பதாக அவர் வாக்களிக்கவில்லை. ஆனால், தொல்லை சூழ்ந்த நிலையிலும் கூட மனோ சமாதானத்தை அளிப்பதாக வாக்களித்தார். (9) மதச் சடங்குகளிலிருந்து மக்களின் மனதை அகற்றி, அன்பின் மூலமாய்ச் செயல்படுகின்ற தேவன் மேலுள்ள விசுவாசத்தைக் கற்றுக் கொடுத்தார். (10) மனித வாழ்வின் உயர்வு அநேக பொருள்களைச் சம்பாதிப்பதைப் பொருத்து அமைவது அன்று. தேவனையும் தன்னைச் சுற்றியுள்ளோரையும் நேசிப்பதைப் பொருத்தே அது அமையும். (11) இயேசு கிறிஸ்துவின் இறப்பும் உயிர்த்தெழுதலுமே அவரது எல்லா போதனைகளுக்கும் அடிப்படை. (12) இயேசு கூறியது இந்த உலகத்திற்கு ஒரு முடிவு உண்டு. மனிதரது ஒழுக்கமும், சன்மார்க்கமும் நாளுக்கு நாள் சீரழிந்து ஒரு பயங்கரமான நிலையேற்படும். அப்போது நான் வந்து இவ்வுலகில் ஒரு பரிபூரண அரசை நிலைநாட்டுவேன். என்னை உண்மையாகப் பின்பற்றுகிறவர்களுக்கு அதில் ஒரு பங்கு உண்டு. (13) இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு மனிதனும் உயிர்த்தெழப்பட்டு தனது வாழ்க்கைக்கு இறைவனிடம் கணக்கு ஒப்புவிக்கவேண்டும். இயேசுவின் மரணத்தின் மூலமாய் அவரது இரட்சிப்பைப் பெற்றவர்கள் தேவனோடு சதாகாலமும் வாழ்வார்கள். தங்கள் பாவத்திலிருந்து மனந்திருந்தி இறைவனது மன்னிப்பைப் பெறாதவர்கள் நரகத்திலே தள்ளப்படுவர்.

## 3. கிறிஸ்துவத்தின் வளர்ச்சி (Expansion of Christianity)

இயேசுநாதர் விண்ணுலகை எய்தியபின் அவரது சீடர்கள் அவரின் போதனைகளான கிறிஸ்துவச் சமயக் கொள்கைகளை உலகின் பல்வேறு பாகங்களுக்கும் எடுத்துச் சென்றனர்.

புனித தோமா பாதிரியார் இந்தியாவிற்கு வந்து இங்கே கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பினார். சவுல் (Saul) என்ற யூதர் முதலில் கிறிஸ்துவச் சமயத்தினரைத் துன்புறுத்தினார். ஆனால், இயேசு இவருக்கு காட்சியளித்து கிறிஸ்துவச் சமயத்தின் கொள்கையை உலகெங்கும் பரப்பக் கோரினார். இவரே புனித பவுல் (St. Paul) என, தனது சமய மாற்றத்திற்குப் பின்னர் கிறிஸ்துவ உலகில் பெரும்புகழ் கொண்டார். முக்கியமாக இவரே கிறிஸ்துவச் சமயம் என்பது யூத மக்களுக்கு மட்டுமல்ல அனைத்துலகிற்குமே உரித்தானது என்றார். இயேசுவின் கொள்கைகளை இவரே ரோமானியத் தலைநகரில் பரப்பியவர். மேலும் இவர் சிரியா, ஆசியா மைனர், மற்றும் மத்தியத் தரைக்கடல் நாடுகளிலும் அவற்றைப் பரப்பினார். ரோமானியப் பேரரசரை வணங்க மறுத்தமையால் நீரோ (Nero) மன்னரால் கி.பி. 64-ல் இவர் கொலை செய்யப்பட்டார். இயேசுவின் சீடர்களில் ஒருவரான பேதுரு ரோமில் கத்தோலிக்கத் திருச்சபையை நிறுவினார். இதுவே பின்னர் கிறிஸ்துவச் சமயத்தின் தலைமையிடமாக மாறியது. இக் கிறிஸ்துவச் சமயக் கோயிலில் எல்லா இன மக்களும் அனுமதிக்கப்பட்டனர். ரோமானியப் பேரரசரை வணங்க மறுத்தமையால் இவரும் கொல்லப்பட்டார். ரோமானியப் பேர்ரசின் இப்படுகொலைக்கு எண்ணற்ற கிறிஸ்துவச் சமயத்தினர் பலியானார்கள். இரக்க குணமும் அமைதியும் கொண்டு நல்லரசனாக விளங்கிய மார்க்கஸ் அரேலியஸ் (Marcus Aurelious) என்பவரும் கூட கிறிஸ்துவர்களைக் கொலை செய்வது என்பது மிகவும் அவசியமெனக் கருதினார். கிறிஸ்துவர்கள் இரத்தம் சிந்த சிந்த, இச்சபை மிகவும் வலிவு கொண்டதாகவே விளங்கியது. இத்தியாகிகளின் இரத்தமே கிறிஸ்துவச் சமயத்தின் விதையாக மாறியது எனலாம். முடிவாக கி.பி. 313-ல் மிலான் ஆணையை (Edict of Milan) வெளியிட்டு கிறிஸ்துவருக்கு உரிமைகள் வழங்கி, கிறிஸ்துவக் கொள்கையையும் பேரரசர் கான்ஸ்டன்டின் (Constantine) ஏற்றுக் கொண்டார். மிகவும் குறுகியக் காலத்தில் கிறிஸ்துவச் சமயத்தையே நாட்டின் மதமாகவும் மாற்றினார். பிற்காலத்தில் ரோமானியப் பேரரசு நாகரிகமற்ற முரட்டின வகுப்பு (Barbarian Kings) அரசர்களால் தாக்கப்பட்டு அழிந்தது. அந்நாட்டைக் கைப்பற்றிய அம்மன்னர்களும் அவர்தம் குடிமக்களும் கிறிஸ்துவ சமயத்தை நாளடைவில் பின்பற்றினார்கள். கி.பி. 15-ம் நூற்றாண்டின் முடிவில் கிறிஸ்துவச் சமயம் ஏறத்தாழ ஐரோப்பா முழுவதுமே பரவியதெனலாம். கிறிஸ்துவச் சமயமெனும் ஆன்மியப் பேரரசின் தலைநகராகவே ரோம் நகரம் விளங்கியது. போப்பாண்டவர் கத்தோலிக்கக் கிறிஸ்துவச் சமயத்தின் தலைவராக

ரோம் நகரில் வீற்றிருந்தார். கி.பி. 16-ம் நூற்றுண்டில் திருச் சபையிலிருந்த குறைகளை மறுக்க ஜெர்மனியில் ஏற்பட்ட சமய சீர்திருத்த இயக்கம் (Reformation movement) காரணமாக ரோமன் கத்தோலிக்கம், பிராட்டஸ்டெண்டுகள் (சமய மறுப்பாளர்கள்) என கிறிஸ்துவத்திலும் சமயப்பிளவு ஏற்பட்டது. பிராட்டஸ் டெண்டுகளினின்றும் பியூரிட்டன்கள் (Puritans) ஆங்கிலிக்கன்கள் (Anglicans) மெத்தாடிஸ்டுகள் (Methodist) எனப் பலப்பிரிவுகள் தோன்றலாயின. இவர்கள் ரோமன் கத்தோலிக்கரின் சில நம்பிக் கைகளை எதிர்த்தனர். ரோமன் கத்தோலிக்கர்களின் கொள் கையான 'புனிதப் பொருள் மாற்றும் கொள்கை' (Transub-stantiation) பாவமன்னிப்புக் கோரல் (Auricular Confession) பாதிரிகளின் துறவு வாழ்வு ஆகிய கொள்கையை எதிர்த்தனர். ஆனால், இயேசுவின் கோட்பாடுகளிலும், அவரின் அடிப்படை யான போதனைகளிலும் இவர்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். இவர்கள் சத்தியவேதம் எனும் நூலைப் பின்பற்றினர். தற்காலத்தில் ஐரோப்பியர்கள் குடியேற்ற நாடுகளைப் பெற்றவுடன் அங்கெல் லாம் கிறிஸ்துவச் சமயத்தைப் பரப்பும் பணியை பாதிரிமார்கள் மேற் கொண்டனர்.

இந்தியாவில் கிறிஸ்துவத்தை உபதேசித்தவர்களே போர்த்து கீசியர்கள்தான் எனலாம். சமய ஒறுப்புக் கொள்கையைக் கடுமை யாகப் பின்பற்றியமையால், இவர்கள் தங்கள் முயற்சியில் தோல்வியே கண்டனர். ஆங்கிலேயர்களுக்கு வாணிபமே முக்கிய மானதால் அவர்கள் மதமாற்றத்தை ஏற்கவில்லை. மேற்கத்திய ரோமன் கத்தோலிக்க மடாலயக் குழு மதுரா மடாலயத்தின் மூலம் எண்ணற்ற இந்துக்களைக் கிறிஸ்துவர்களாக மாற்றியது. கல்கத்தாவிலுள்ள செரம்பூர் மடாலயமும் (Serampore) அதிக அளவில் இந்துக்களை கிறிஸ்துவத்தில் இணைத்தது. இந்துக்களி டையே கிறிஸ்துவத்தைப் பரப்புவதில் கத்தோலிக்கர்களும் பிராட் டெஸ்டென்டுகளும் போட்டியிட்டுப் பணியாற்றினர்கள்.

### 4. இந்தியப் பண்பாட்டிற்கு கிறிஸ்துவத்தின் சேவை (Christian Contribution to Indian Culture)

கிறிஸ்துவ மடாலயங்கள் கிறிஸ்துவின் நற்செய்தியைப் பரப் பவே இந்தியாவிற்கு வந்தவையெனினும் மிக விரைவில் இந்தியப் பண்பாட்டுடன் இணைந்ததோடல்லாமல், இந்தியத் தன்மை (Indianized) யாக்கப்பட்டது. இந்தியப் பாமரமக்களிடையே எழுச்சியை ஊட்ட இம்மதம் பெருந்தொண்டாற்றியது. இவர் களின் புகழ்மிகு சேவை, இந்தியாவில் கல்வியைப் புகுத்தி, இந்துக்

களுக்கு அறிவுச் சேவையாற்றினர்கள். இயேசு சபை தன்னால் இயன்ற இடங்களிலெல்லாம் கல்வி நிலையங்கள் அமைத்து சமயத்துறையை விடுத்து விஞ்ஞானக் கல்வியை கிறிஸ்துவச் சமய நெறிமுறைகளுடன் போதித்தனர். திருச்சியிலுள்ள புனித யோசேப் கல்லூரியும் சென்னையிலுள்ள லயோலாக் கல்லூரியும் கத்தோலிக்கர்களால் நிறுவப்பட்டு இன்றும் கல்வித்துறையில் அரும்பணியாற்றிக் கொண்டிருக்கின்றது. தாம்பரத்திலுள்ள சென்னை கிறிஸ்துவக்கல்லூரி (MCC), திருச்சியிலுள்ள பிஷப் ஹீபர் கல்லூரி முதலியன பிராட்டஸ்டென்டு கிறிஸ்துவர்களினல் நிறுவப்பட்டு, இன்றும் கல்வித்துறையில் அரும்பெரும் சேவைச் செய்து மக்கள் மத்தியிலே ஓர் உயர்ந்த இடத்தைப் பெற்றுள்ளன. மேலும் இந்தியாவில் இலண்டன் மடாலயம் எண்ணற்ற உயர் நிலைப் பள்ளிகளை நிறுவியுள்ளது. மேலும் தொழில் கல்விக் கூடங் களையும் தொழில் நுணுக்கக் கல்லூரிகளையும் நிறுவியுள்ளார்கள். இந்தியாவில் அச்சுக் கூடங்களை நிறுவி கல்வியறிவைப் பெருக் கினர்கள். வீரமாமுனிவர் எனும் பெஸ்கி பாதிரியார் தலமொழி யான தமிழைப் பயின்று, தேம்பாவணி எனும் இலக்கிய நூலை வெளியிட்டுப் பெருமை செய்தார். இவரைப் போன்றே பாதிரி யார்கள் அவ்வப்பகுதி மொழியினைப் பயின்று அதிலேயே தங்கள் பணியை மேற்கொண்டனர். கால்டுவெல் அவர்களும் தமிழில் புலமை பெற்று திராவிட மொழியின் இலக்கணத்தைத் தொகுத்து எழுதினர். மற்றும் ஹீராஸ் பாதிரியார் போன்றோர் வரலாற்றிலக் கியம் படைத்தனர். இவரின், பல்லவர்கள் மற்றும் சிந்து சம வெளி நாகரிக ஆராய்ச்சி இன்றும் குறிப்பிடும்படியாகச் சிறப்பாக அமைந்துள்ளது. பிறருக்கு அன்பு காட்டுவதையே கொள்கை யாகக் கொண்ட கிறிஸ்துவம் தனது மடாலயங்களின் மூலமாக தூத்துக்குடிக்கு அருகில் அனாதை இல்லத்தையும் வேலூரில் ஒரு பிணிபோக்கும் மருத்துவ இல்லத்தையும் (Hospital) நிறுவினர். மற்றும் தொழுநோய் மருத்துவமனையும் இவர்களின் நிறுவனமே. இந்தியர்களுக்கு தன்னலமற்ற தன்மையைப் போதிக்க இவர்கள் ஓர் எடுத்துக் காட்டாகவே விளங்கினர். இந்தியச் சமுதாயத்திலே ஏழை எளிய வர்க்கத்தினருக்கே இவர் களின் சேவை ஒரு வரப்பிரசாதமாகவே அமைந்தது. இந்தியச் சாதிக் கொடுமையான தீண்டாமையை அகற்ற, பறையர், பரவர்கள் போன்றவர்களைத் தங்கள் சமயத்திலே இணைத்துக் கல்வி அறிவைத் தந்து மற்ற கிறிஸ்துவர்களுடன் இணையாகவே உயர்த்திய பெருமை இச்சமயத்தையே சாரும். நாகாலாந்திலுள்ள மலைவாழ் மக்களான பண்பாடற்ற மக்களை, தங்கள் சமயத்திலே இணைத்து நாகரிகம் கொண்ட கல்வி அறிவு பெற்றவர்களாக மாற்றியப் பெருமை, தன்னலமற்ற கிறிஸ்துவச் சமயத்தையே

சாரும். ஆனால், ஈண்டும் கிறிஸ்துவச் சமயத்திலும் சாதிக் கொடுமையும் ஏற்றத்தாழ்வும் ஒழியாமை குறிப்பிடத்தக்கது. ஆனாலும், கிறிஸ்துவத்தின் மேன்மையாலேயே, சமுதாயத்தின் அடித்தளத்தில் அவலமுற்ற மக்கள், தங்கள் வாழ்விலே ஒரு ஒளி மயமான நம்பிக்கையைக் கொண்டு இயங்க முடிந்தது. தீண்டத் தகாதோர்களை தங்கள் சமயத்திலே இணைத்து தீண்டாமையை ஒழிப்பதிலும் இவர்கள் ஓரளவு வெற்றி கொண்டார்கள் எனலாம். நவீனகால இந்தியத் தலைவர்களான சுவாமி விவேகானந்தர், நாராயணகுரு, பூலி, ஈ. வே. ராமசாமி பெரியார், காந்திஜி போன்ற பெரும் தலைவர்கள் தீண்டாமையை ஒழிக்கப் பெரும் சேவை செய்தனர். ரோமன் கத்தோலிக்க மடாலயங்களைப் பின் பற்றியே இராமகிருட்டின பரம்ம ஹம்சரின் மடாலயத் துறவிகள், உயர்கல்வி நிலையங்களைத் தோற்றுவித்து, பெரும் சேவை செய்யத் துவங்கினர். தன்னலமற்ற சேவை, பகைவனுக்கும் அருளும் மனம், நேர்மைக்கும் நியதிக்கும், துன்பத்தையும் அஞ்சாமல் ஏற்பது, சுகவீனருக்கும் பாதிக்கப்பட்டோர்களுக்கும் சேவை செய்தல், போன்ற கொள்கைகள் இந்தியாவில் கிறிஸ்துவச் சமயம் பரவும் முன்னரே இருந்திருப்பினும், இவர்களின் வருகையால் இக்கொள்கைகள் மேலும் வலுப்பட்டு வலுவான சமுதாயத்தைப் படைத்தன எனலாம்.

## ஊ. இஸ்லாமிய சமயம்

இந்தியாவில் அதிகமாகப் பரவியுள்ள சமயங்களில் இஸ்லாமும் ஒன்று. இந்தியாவில் ஆறுகோடிக்கும் அதிகமான முஸ்லிம்கள் இருக்கின்றனர். பாகிஸ்தானில் இருக்கின்ற முஸ்லிம்களை விட இது சற்று அதிகமாகும். இவர்கள் இந்தியாவின் பல பாகங் களிலும் வசிக்கின்றனர். உருது, இந்துஸ்தானி, பாரசீகம் போன்ற மொழிகளுடன், தாங்கள் வசிக்கின்ற பகுதியின் மொழியையும் பேசுகின்றனர். தமிழகத்திலிருக்கும் ‘லப்பைகள்’ (Labbai) என்பவர்கள் தமிழையே தாய்மொழியாகக் கொண்டுள்ளனர். இஸ்லாமியரிடமும் பல உட்பிரிவுகள் உள்ளன. அவைகளில் மிகவும் முக்கியமான பிரிவுகள் ‘ஷியா’வும் (Shia) சுன்னி (Sunni) என்ற பிரிவுமாகும். பல உட்பிரிவுகளைக் கொண்டிருப்பினும் இஸ்லாம் சமயத்தின் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் ஏற்றுக் கொண்டு, அடிப்படையில் ஒரே சமயத்தினராக ‘முஸ்லிம்களாக’க் காட்சியளிக்கின்றனர். முகமது நபிகளை இறையருள் பெற்றவ ராகவும், திருக்குர்ஆனை இஸ்லாமிய வேத நூலாகவும் போற்றிப் புகழுகின்றனர். ஒரே இறைவனை ‘அல்லா’ என்று, தினமும்

ஐந்து முறை தொழுகின்றனர். 'ஒரே இறைவன்' என்பது இஸ்லாமின் தலையாய தத்துவமாகும். எனவே முஸ்லிம்கள் ஒரே கடவுளை 'அல்லா' (Allah) என்ற பெயரில் தொழுகின்றனர். உருவ வழிபாட்டை அறவே வெறுக்கின்றனர். முஸ்லிம்கள் அனைவரும் ஒரேவிதக் கொள்கை, தொழுகை முறை, பழக்க வழக்கங்கள் ஆகியவற்றைக் கொண்டிருக்கின்றனர்.

### 1. இறையருள் பெற்ற முகமது (Prophet Mohammad)

இஸ்லாம் மதத்தைத் தோற்றுவித்தவர் முகமது நபிகள் (இறையருள் பெற்ற முகம்மது - Prophet Mohammad) ஆவார். இவர் அரேபியாவிலுள்ள மெக்கா நகரில் கி. பி. 570ஆம் ஆண்டில் பிறந்தார். இவருடைய தந்தை அப்துல்லா, (Abdullah) தாயார் பெயர் அமினு (Amina). 'குரைஷ்' (Quaraish) என்ற செல்வாக்குமிக்க குலத்தில் பிறந்த இவர், ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவர். குழந்தையாக இருந்த போதே பெற்றோர்களை இழந்த இவரை, தந்தைவழி பாட்டனர் ஓராண்டுக்காலம் வளர்த்தார். பாட்டனரும் இறந்த பின்னர், சித்தப்பாவான அபு-தாலிப் (Abu Talip) என்பவரின் அரவணைப்பில் வளர்ந்தார். இளம் வயதில் ஏழ்மையில் வாடியதால் முறையான கல்வி கற்க வாய்ப்பில்லாது போயிற்று. இவருக்கு பன்னிரு வயதே ஆனபோது அவரது சித்தப்பாவின் கையாளாக, வர்த்தகக் குழுவில் பணியாற்றினர். அபு-தாலிப் வர்த்தகத்தின் நிமித்தம் (Caravan) வெளிநாடு களுக்குச் சென்ற போது, முகமதுவும் அவருடன் சென்றார். அவ்வாறு சிரியா போன்ற நாடுகளுக்குச் சென்றபோது, அந்நாட்டு மக்களின் நடவடிக்கைகள் இவரை மிகவும் கவர்ந்தன. பதினறு வயது காளையாக முகமது இருந்தபோது, மக்காவில் குலங்களுக் கிடையே நடந்த போரில் பங்கெடுத்துக் கொண்டார். வயது 25 ஆனபோது 'கதிஜா' (Kadija) என்ற விதவையான செல்வச் சீமாட்டியின் வர்த்தகப் பொறுப்பை ஏற்ருர். கதிஜாவின் பேரா ளாக ஒருமுறை சிரியா நாடு சென்று, பெரும் இலாபத்துடன் திரும்பினர். முகமதுவின் நேர்மை, அறிவாற்றல், அழகு ஆகியவை கதிஜாவை மிகவும் கவர்ந்தது. இதனல் முகமதுவை திருமணம் செய்துகொள்ள விரும்புவதாக கதிஜாவே கேட்க, அவரும் சம்மதித் தார். இவர்களின் திருமண உறவில் பிறந்த பல பெண் குழந்தை களில் பாத்திமா (Fatima) என்ற ஒரு மகளைத் தவிர மற்றவை யனைத்தும் இறந்துபட்டன. பாத்திமா வளர்ந்தவுடன் அவரை முகமதுவின் வளர்ப்பு மகனும், அபு-தாலிபின் மகனுமான அலி-க்கு (Ali) திருமணம் முடித்தார்.

வர்த்தகத்தின் காரணமாக பாலஸ்தீனம், எகிப்து, சிரியசு போன்ற நாடுகளில் முகமது பயணம் செய்தார். அப்பயணங்களின் போது கிறித்தவ, யூத, சொராஸ்டிரிய சமயத்தைச் சேர்ந்த அறிஞர்களைக் காணவும், கண்டு பேசவும், பழகவும் இவருக்கு வாய்ப்பு கிட்டியது. வேற்று சமய அறிஞர்களிடம் பழகிய போது, அவர்கள் பின்பற்றிய 'ஒரு கடவுள் கொள்கை' இவரை மிகவும் கவர்ந்தது. செல்வச்சீமாட்டியை மணந்த முகமது, அக்காலத்து செல்வ சீமான்களைப் போலவே, தானும், ஆண்டில் ஒருசில நாள்கள் குகைகளுக்குச் சென்று, உலகை மறந்து தியானத்திலிருப்பது வழக்கம். முகமது வழக்கமாக 'ஹிரா' என்ற குகையில் (Ghar Hira) தியானிப்பது உண்டு. 'ஹிரா' என்ற குகை மெக்காவினின்று மூன்றுகல் தொலைவிலிருந்த ஒரு மலையில் அமைந்திருந்தது. அவ்வாறு குகையில் அமர்ந்திருக்கும் போது, தாம் வெளிநாட்டுப் பயணத்தின் போது அறிந்த ஒரு கடவுள் தன்மையைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருப்பார். முகமதுவிற்கு நாற்பது வயதான போது, தியானத்திலும், சிந்தனைகளிலும் மிகவும் அக்கரைகாட்ட ஆரம்பித்தார். இரவு, பகல் பாராது பல நாள்கள் கூட தியானத்தில் இருப்பது வழக்கமாக ஆனது. அவ்வாறு தியானத்தில் இருக்கும் போது தமது இன மக்களின் வழிபாட்டு முறைகளையும், சமுதாய மூடப்பழக்க வழக்கங்களைப் பற்றியும் சிந்திக்க ஆரம்பித்தார். 'குரைஷ்' இனத்தைச் சேர்ந்த இவரது குல மக்களும், பொதுவாக அராபியர்களும் 360-க்கும் அதிகமான உருவங்களை கடவுள்களாக வணங்கினர். அவர்களுடைய வழிபாட்டு முறைகளையும், மூடநம்பிக்கைகளையும் முகமது அறவே வெறுத்தார். அவரது மனத்தில் சமுதாய சீர்திருத்தம் செய்யவேண்டும் என்று எழுந்த உணர்வு, வெறியாக மாறியது. மக்களின் மூடப்பழக்க வழக்கங்களைக் களைந்து, முன்னேற்றப் பாதையில் செலுத்த தனக்கு வழிகாட்டுமாறு இறைவனிடம் இறைஞ்சினர். முகமது தியானத்தில் இருக்கும் போது ஏற்பட்ட உணர்ச்சிக் கொந்தளிப்பால், வலிப்புநோய் வந்தவனைப் போல கைகால்களை உதைத்துக் கொண்டு உருண்டு புரள்வதுகூட உண்டு. அவ்வாறு ஒருநாள் தன்னையறியாத நிலையில் கிடந்த போது, அவர் தனது காதருகில் குரல் ஒலி கேட்டார். கி.பி. 610ஆம் ஆண்டில் ஓர் இரவில் அதுவரை அவர் காதருகில் ஒலித்த குரலின் உருவத்தை கனவில் காண்பது போல கண்டார். அவ்வுருவம் தன்னை கேப்ரியேல் (Angel Gabriel) என்றும், இறைவனுகிய அல்லாவிடமிருந்து நற்செய்தியுடன் வந்திருப்பதாகவும், அல்லாவின் அச்செய்தியை முகமது மக்களிடையே பரப்ப வேண்டுமென்றும் கூறி மறைந்தது. கனவில்

லிருந்து விடுபட்ட முகமது அச்சமடைந்து, அதிர்ச்சியடைந்து தமது வீட்டை நோக்கி ஓடினுர். வீட்டில் தனது மனைவி யிடத்தில் தனது அனுபவத்தைக் கூறினுர். முகமதுவின் சொற் களைக் கேட்ட அவரது மனைவி கதிஜா அகமகிழ்ந்தார். 'இறை யருள் பெற்ற ஒருவர் அக்காலத்தில் தோன்றப் போகிருர்' என்று மற்ற சமயத்தினர், குறிப்பாக கிறிஸ்தவர்கள் நம்புவதாகவும், அவர்கள் எதிர்நோக்கிய அந்த இறையருள் பெற்றவர் அவரே என்றும் கதிஜா மகிழ்வுடன் அறிவித்தார். மனைவியின் ஆதர வுடன், அதிசயக் குரல் தனக்கு அறிவித்த புதுமைக் கருத்துக் களைக் கொண்டு புதிய சமயத்தை தோற்றுவித்தார். அல்லாவின் தூதுவரான கேப்ரியேல் அடிக்கடி முகமதுவின் முன்னர் தோன்றி, இறைவன் திருவுள்ளத்தை அறிவுறுத்தினுர். இத்தகு நிகழ்ச்சி களால் முகமதுவும் தனக்கு இறையருள் கிடைத்திருப்பதாக நம்பினுர். தன்னை அல்லாவின் தூதுவன் (Messenger of Allah) என்றே அழைத்துக் கொண்டார். தான் அறிந்தவற்றை தன்னுடன் நெருங்கியவர்களான, கதிஜா, அலி, அபுபக்கர் போன்றவர்களிடம் அறிவித்து, அவர்களின் நம்பிக்கையைப் பெற்ருர். அம்மூவரே முதன் முதலில் முகமதுவின் சொல்கேட்டு, மனமாறியவர்கள் ஆவர். மூன்ருண்டுகள் இரகசியமாக செயல் பட்டு வந்த முகமது, பின்னர் மக்களிடையே தனது கொள்கைகளை விளக்க ஆரம்பித்தார். உருவ வழிபாட்டையும், பல கடவுள் கொள்கைகளையும் சாடினுர். அவர் குலத்தைச் சேர்ந்தவர்கள் முதலில் அவரது கருத்துக்களைக் கேட்டு எள்ளிநகையாடினுர்கள். அவர் தொடர்ந்து தனது புதிய புரட்சிக் கருத்துக்களைப் பரப்பவே ஆத்திரமடைந்தனர். அவருடைய புரட்சிக் கருத்துக்கள் பரவ ஆரம்பித்தால் மெக்கா நகரில் குவிகின்ற இறைவழிபாட்டுப் பொருள்கள் தடைப்படும். அதனுல் தங்களது பொருளாதாரநிலை மிகவும் பாதிக்கப்படும் என அஞ்சினுர்கள். எனவே முகமது வின் புதிய சமயக்கொள்கைகளை முழு மூச்சுடன் எதிர்க்க ஆரம்பித்தனர். முகமதுவின் புரட்சிக் கருத்துக்களை ஏற்றுக் கொண்டவர்களைப் பிடித்து சித்திரவதை செய்தனர். மறை முகமாக முகமதுவிற்கும் தொல்லைகள் கொடுக்க ஆரம்பித் தனர். ஆனுல், கதிஜாவின் செல்வாக்கும், அபுதாலிபின் உயர் நிலையும் முகமதுவைக் காப்பாற்றியது. 619ஆம் ஆண்டில் கதிஜாவும், பின்னர் அபுதாலிபும் ஒருவர் பின் ஒருவராக மறைந்த பின்னர், தனது பாதுகாப்பற்ற நிலையை முகமது உணர்ந்தார். எதிரிகள் அவரை நெருங்கி சூழ ஆரம்பித்தனர். எனவே அறுபது கல் தொலைவிலிருந்த 'தய்ஃப்' (Taif) நகர் சென்று, அங்கு தமது புதிய சமயத்தின் புரட்சிக் கருத்துக்களைப் பரப்ப முயன்ருர். தைபா நகர மக்கள் அவரைப் பெரிதும் கேலி செய்தனர், கல்லால் அடித்துத்

துன்புறுத்தினர். முகமது மீண்டும் மெக்கா நகர் திரும்பினார். அங்கு 'சயிதா' (Saida) என்ற விதவையையும், 'ஆயிஷா' (Aiyisha) என்ற ஒன்பதே வயது நிறைந்த இளநங்கையையும் மணந்தார். ஆயிஷா அபுபக்கரின் செல்வமகளாகும். இதன் பின்னர் திடீரென ஒருநாள் இவர் பறக்கும் குதிரையிலேறி ஜெருசலம் நகர் அடைந்து, அங்கிருந்து சொர்க்கலோகம் சென்று, சொர்க்கத்தின் ஏழாவது இறுதிப் பிரிவில் அமர்ந்திருந்த தலைமை இறைவனான 'அல்லா' வுடன் உறையாடி, மறுநாள் மெக்கா திரும்பியதாக இஸ்லாமிய சமய நூல்கள் குறிப்பிடுகின்றன. (Heavenly Ascension) இந் நிகழ்ச்சி மிஹ்ராஜ், (Mihraj) எனக் குறிக்கப்படுகின்றது.




படம் 11. அரேபியா

1. பாலஸ்தீனம் 2. ஜெருசலேம் 3. சினாய் தீபகற்பம்
4. எகிப்து 5. அரேபியா 6. சிரியா
7. செங்கடல் 8. மத்திய தரைக்கடல் 9. பாரசீக வளைகுடா

620ஆம் ஆண்டில் 'யாத்ரிப்' (yathrib) நகரைச் சேர்ந்த புனிதப் பயணிகள் மெக்கா நகர் வந்தனர். அவர்களிடையே தமது புதிய கருத்துக்களை முகமது வெளியிட்டார். யாத்ரிப் நகரில் இனப் போராட்டம் தொடர்ந்து நடைபெற்று வந்தது. போராட்டத்தில் ஈடுபட்ட ஒரு பிரிவைச் சேர்ந்த மக்கள் தமது ஊர் வந்து, தலைமையேற்கும்படி முகமதுவை வேண்டினார்கள். இதற்கிடையில் மெக்கா நகரில் முகமதுவைக் கொலை செய்வதற்கான திட்டங்கள்

தீட்டப்பட்டன. அத்திட்டத்தினை அறிந்த முகமது, மெக்கா நகரிலிருந்து வெளியேறினார். அவர் வெளியேறிய ஆண்டு கி.பி. 622ஆகும். இவ்வாண்டிலிருந்துதான் முகமதியராண்டு கணக்கிடப் படுகின்றது. முகமது மெக்கா நகரிலிருந்து வெளியேறிய நிகழ்ச்சி 'ஹிஜிரா' (Hijira) என்றழைக்கப்படுகின்றது. இஸ்லாமிய வரலாற்று நூல்கள் இந்நிகழ்ச்சியின் சிறப்பை விளக்குகின்றன. 'ஹிஜிரா' நிகழ்ச்சி முகமதுவின் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனையாக அமைந்தது. யாத்ரிப் நகர் சென்ற இவரை மக்கள் உற்சாகத்துடன் வரவேற்றனர். அத்தகைய மக்களின் அன்புத் தொல்லையைக் கண்ட முகமது அகமகிழ்ந்தார். யாத்ரிப் நகரின் தலைவரானார். தமது புதுமையான, புரட்சிகரமான சமயத்தின் கொள்கைகள் வரவேற்கப்பட்டன. அவரது கொள்கையினை ஏற்றவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் வளர்ந்தது. முகமதுவாக இருந்த அவரை 'நபிகள் நாயகமென' அல்லாவின் தேவ தூதுவன் எனப் போற்றிப் பணிந்தனர். யாத்ரிப் நகரின் பெயரை 'மதினா' (Madina) என்று மாற்றினார். 'மதினா' என்பது நபிகள் நாயகத்தின் உறைவிடம் (City of the Prophet) என்று பொருள்படும். மதினா அருகில் வாழ்ந்த 'பெதுயின்' (Bedouins) என்ற முரட்டுச் சாதியினரைத் தமது கனிவால் கவர்ந்து, தன்னுடைய புனிதப் படையின் வீரர்களாக்கினார். தன்னை எதிர்த்த இனத்தினருடன் போரிட்டார். மெதினா நகரிலிருந்த உட்பூசல்களை அழித்து, அந்நகரின் ஆட்சித் தலைவராக உயர்ந்தார். 630ஆம் ஆண்டில் மக்கா நகருக்குப் படையுடன் சென்று, வென்றார். அங்கு மக்கா நகரின் மையத்தில் 'காபா' (Kaabah) என்ற விண்ணுலகிலிருந்து வந்த கருங்கல் தூணைச் சுற்றியிருந்த மண்டபங்களில் குடிகொண்டிருந்த கடவுள் சிலைகளை உடைத்து நொறுக்கினார். வெறும் கற்கள் மட்டுமே மிஞ்சின. மக்கா நகர் மக்கள் நபிகள் நாயகத்தின் புதுமையான மதத்தினை மகிழ்ச்சியுடன் ஏற்றனர். மக்கா நகர் எப்பொழுதும் போல புனித நகராகவே இருக்கும் எனவும், முஸ்லிம்கள் அனைவரும் மக்காவை நாடி புனிதப் பயணம் மேற்கொள்ள வேண்டும் என்றும் ஆணையிட்டார். நபிகள் நாயகத்தைப் பின்பற்றியவர்கள் நபிகளின் புதிய கொள்கைகளை அரேபியா முழுவதிலும் பரப்பினர். அரேபியாவின் எல்லைகளைத்தாண்டியும் இச் செய்தி பரவியது. புதிய சமயத்தினை உருவாக்கி, அரேபியாவில் சமுதாய, சமயப் புரட்சியைத் தோற்றுவித்த நபிகள் நாயகம் 632ஆம் ஆண்டில் மதினாவில் அல்லாவை அடைந்தார். மதினாவில் அவரது உடல் நல்லடக்கம் செய்யப்பட்டது.

### 2. நபிகளின் போதனைகள்

முகமதுநபி போதித்த சமயம் 'இஸ்லாம்' எனப் பெயர் பெற்றது. 'இஸ்லாம்' என்ற சொல்லுக்கு 'இறைவன் திருவடியைச் சரண் அடைதல்' என்பது பொருளாகும். நபிகள் தனது முதல் சமய பிரசாரத்தை மதினு நகரில் தொடங்கும் முன்னர், தாம் நின்று பேசப் போகும் இடத்தை மும்முறை விழுந்து வணங்கிய பின்னரே, தமது [illegible] சொற்பொழிவைத் தொடங்கினர். 'இஸ்லாம்' என்ற சொல்லுக்கு 'இறைவன் திருவடியைச் சரண் அடைதல்' என்பது பொருள். அந்த 'இஸ்லாம்' சமயத்தைத் தழுவியவர்கள் 'முஸ்லிம்கள்' [illegible] அழைக்கப்பட்டனர். 'முஸ்லிம்' என்ற வார்த்தை 'இறைவனின் திருக்கட்டளைக்குப் பணிந்தவர்' (Surrendering oneself to the will of God) என்பது பொருளாகும். நபிகளின் சமய போதனைகள் யாவுமே இறையருளால் அவரது உள்ளத்தில் உதித்தவை என நம்பப்படுகின்றது. நபிகளின் மறைவிற்குப் பின்னரே அவரது போதனைகள் தொகுக்கப்பட்டு 'திருக்குர்ரான்' (Quran) என்றழைக்கப்பட்டது. திருக்குரானில் 114 இயல்கள் (Chapters) அடங்கியுள்ளன. வழிபாட்டின் சிறப்பு, பண்பியல், கடவுளின் படைப்பின் தன்மை, வெள்ளம், விதி, (Predestination) உயிர்த்தெழுதல் (Resurrection), 'தீர்ப்பு நாள்' (Day of Judgement) ஆகிய பொருள்கள் பற்றி, திருகுர்ரான் விரித்துரைக்கின்றது. மேலோட்டமாகப் பார்க்கும்போது இயேசு கிறிஸ்துவின் போதனைகளை ஒத்திருப்பது போலக் காணப்படுகின்றது. அப்ரகாம் (Abraham) மோசஸ் (Moses) போன்ற பழைய ஏற்பாட்டில் (Old Testement) கூறப்பட்டிருக்கும் இறையருள் பெற்றவர்கள் (அல்லது) தீர்க்கதரிசிகளின் (Prophets) தன்மையை முகமதுநபிகளும் ஏற்றுள்ளார். அதேபோல இயேசு கிறிஸ்துவையும், தன்னைப் போலவே 'இறையருள் பெற்றவர்' என்றே குறிப்பிடுகிறார். இயேசுவை இறைவனின் திருக்குமாரன் அல்லது தேவகுமாரன் என்றழைப்பதை முகமதுநபிகள் ஏற்றுக்கொள்ளவில்லை. மேலும் இறையருள் பெற்றவர்கள் வரிசையில் தானே இறுதியானவரென்றும், இனி இறையருள் பெற்றவர்கள் தோன்றவே மாட்டார்கள் என்றும் கூறியிருக்கின்றார்.

முக்மதுநபிகளின் போதனைகள் எளிமையானவை. பின்பற்றுதற்கும் எளிதானவை. வழிபாட்டுச் சடங்குகளோ, முறைகளோ, வழிபாடு நடத்தும் புரோகிதர்களோ, அல்லது வழிபடும் திருவுருவமோ இஸ்லாமிய சமயத்தில் இல்லை. "இறைவன் ஒருவரே, அவர் அல்லா எனப்படுவர்" அல்லாவின் அருள்பெற்றவரே நபிகள் நாயகம் முகமது ஆவர்." இக்கருத்துக்களே இஸ்லாமிய

சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். ஒவ்வொரு முஸ்லிமும் தினமும் ஐந்து முறை தவருது தொழுகை நடத்த வேண்டும். வெள்ளிக்கிழமைகளில் மசூதிக்குச் சென்று, பொதுத் தொழுகையில் கலந்துகொள்ள வேண்டும். முகமது இறையருள் பெற்ற ரம்ஸான் (Ramzan) மாதத்தில் உண்ணு நோன்பு இருக்க வேண்டும். சூரியன் உதித்தது முதல் மறையும் வரை எவ்வித உணவையும் உட்கொள்ளாது நோன்பிருக்க வேண்டும். இரவில் உணவு உட்கொள்ளலாம். ஒவ்வொரு முஸ்லிமும் தமது வாழ்நாளில் ஒருமுறையாவது மக்காவிற்குப் புனிதப் பயணம் மேற்கொள்ள வேண்டும். (Haj). 1. ஒரே இறைவன் அது அல்லா, முகமது இறையருள் பெற்றவர் என்ற நம்பிக்கை (Faith) 2. தினமும் ஐந்து முறை தொழுதல் (Prayer) 3. ஏழை எளியோருக்கு தானம் செய்தல் (Zakat-Alms Giving) 4. ரம்ஸான் மாதத்தில் நோன்பிருத்தல் (Ramzan) 5. மெக்கா புனிதப் பயணம் மேற்கொள்ளுதல் (Haj) ஆகிய இவ்வைந்தும் இஸ்லாமின் அடிப்படைக் கொள்கைகள் அல்லது தூண்கள் என நம்பப்படுகின்றது (Five pillars of Islam). இவ்வைந்து கொள்கையுடன் அல்லாவின் செய்தியைப் பரப்ப, தேவையாஞல் புனிதப் போரையும் (Jihad) மேற்கொள்ள வேண்டும் என்ற ஆருவது கட்டளேயும் உண்டு. புனிதப் போர் என்பது இஸ்லாமிய சமயத்திற்கு ஆபத்து வரும் போது தொடுக்கின்ற தற்காப்பு போரேயாகும். வலிந்து போர் தொடுப்பதல்ல என்பதாகும். தூய நற்பணிகளேயும், அல்லாவிடத்து நன்னம்பிக்கையை கொண்டிருப்பவன் சொர்க்கத்திற்குச் செல்வான் என்றும், தீயவழிகளில் ஈடுபடுபவன் நரகத்தில் தள்ளப்படுவான் என்றும் இஸ்லாமிய சமயம் அறிவுறுத்துகின்றது.

**இஸ்லாமியப் பண்பியல் (Ethics):** இஸ்லாமிய சமயம் சில பண்பியல் கட்டுப்பாடுகளே உருவாக்கியிருக்கின்றது. பணியாளர்களுக்கு முறையான ஊதியம் குறிப்பிட்ட காலத்தில் தவருது அளிக்கப்பட வேண்டும். முதலாளிகள், தொழிலாளர்களுக்குக் கடனுதவி செய்யலாம். ஆனல், கடன்களுக்கு வட்டி வசூலிக்கக்கூடாது. ஒரு முஸ்லிம் நான்கு மனைவியரை மணந்து கொள்ளலாம். நான்கு மனைவியரை வைத்து காப்பாற்றும், வசதி பெற்றிருந்தால் மட்டுமே அவ்வாறு செய்யலாம். மனைவியர்கள் இஸ்லாமிய சமயத்தைச் சேர்ந்தவர்களாக இருக்க வேண்டிய அவசியமில்லை. யூத, கிருஸ்துவ சமயங்களைச் சேர்ந்த பெண்களை மணம் செய்துகொள்வதை இஸ்லாம் வரவேற்கிறது. ஆனல், உருவ வழிபாட்டை மேற் கொண்டுள்ள பெண்ணை மணம் செய்து கொள்ளத் தடை விதிக்கின்றது. பிறன் மனைவியுடன் கள்ள உறவு கொண்டால் அந்தக் குற்றத்திற்குத் தண்டனை 100 கசையடிகள் ஆகும்.

ஆண் பெண் இருபாலருமே திருமண விலக்கு (Divorce) பெறுவது எளிது. ஒரு குறிப்பிட்ட சட்டதிட்டங்களுக்கு உட்பட்டு, திருமண விலக்கு அளிக்கப்பட்டது. பெண் ஆணுக்கு அடிமை. கணவனுக்கு அடிபணிந்து நடப்பதே மனைவியின் கடமையெனக் குறிப்பிடுகின்றது. குழந்தைகள் பெற்றோருக்குப் பணிந்து நடக்க வேண்டும். மது அருந்துவது, சூதாடுவது, பன்றியிறைச்சி உண்ணுவது ஆகிய இம்மூன்றும் தடைசெய்யப்பட்ட, வெறுக்கத் தக்க பழக்கங்களாகும். ஒருவர் மற்றொருவரை இழித்துப் பேசுவது தவிர்க்கப்படவேண்டும். நோயுற்றவர்களுக்கும், வறியவர்களுக்கும் உதவுவது உயர்பண்பாகப் போற்றப்படும். 'மனிதர் அனைவரும் சகோதரரே' என்ற சகோதர பாசத்தோடு அனைவரிடமும் பழக வேண்டும். அடிமைகளை வைத்திருப்பது தவறன்று. ஆனால், அடிமைகளையும் மனிதாபிமானத்தோடு நடத்தவேண்டும். என இஸ்லாமிய சமயக் கோட்பாடுகள் பண்பியலைப்பற்றி கூறுகின்றன.

### 3. இஸ்லாமிய சமயத்தின் வளர்ச்சி (Expansion of Islam)

நபிகள் நாயகத்தின் காலத்தில் அரேபியாவின் பெரும் பகுதியில் இஸ்லாம் பரவி நின்றது. அரசு, சமயம் ஆகிய இவ்விரு துறைகளின் தலைவராக நபிகள் நாயகம் இருந்து, இஸ்லாமியத்தை வேரூன்றச் செய்தார். அவரது மறைவின் பின்னர், நபிகள் நாயகத்தின் உற்ற தோழரும், மாமனுருமான அபுபக்கர் (Abu Baker) முஸ்லிம்களின் தலைவராக ஒருமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் 'காலிப்' அல்லது 'காலிபா' (Caliph or Calipha) என்ற பட்டத்தை ஏற்றுக்கொண்டார். 'காலிபா' என்ற சொல் 'அல்லாவின் இறையருள் பெற்ற நபிகள் நாயகத்தின் தலைமையை ஏற்றுக் கொண்டவன்' என்று பொருள்படும். (Khalifat Rasul Allah) அபுபக்கர், அவருக்குப் பின்னர் தலைமை யேற்ற உமர் (Omar) உஸ்மான் (Osman) அலி (Ali) ஆகியோரின் காலத்தில் எகிப்து, பாரசீகம், சிரியா, பாபிலோன், அசிரியா போன்ற நாடுகளில் இஸ்லாமிய சமயமும், இஸ்லாமியர் ஆட்சியும் விரிவடைந்தன. அவர்களுக்குப் பின்னர் தலைமையேற்ற 'உமையாக்கள்' (Ommayads) டமாஸ்கஸ் (Damascus) நகரைத் தலைநகராகக் கொண்ட உமையது பேரரசினை (Ommayad Empire) நிறுவினர். 'அபாசிடுகள்' (Abbasids) உமயதுகளை வீழ்த்திய பின்னர் 'பாக்தாத்' (Baghdad) நகரை தலைநகராக்கி, மாபெரும் இஸ்லாமியப் பேரரசை ஆண்டனர். மத்தியாசியாவிலிருந்த வீரம் மிக்க துருக்கியர்களை வென்று, மதமாற்றம் செய்து, அவர்களுதவியால் ஆப்பிரிக்காவின் வடபகுதி முழுவதையும் வென்று, பின்னர் ஸ்பெயின் நாட்டிலும் இஸ்லாமியரின் ஆட்சியை நிறுவினர்.

உமயது காலிபாவான முதலாம் வலித் (Ommayad Caliph Walid I) காலத்தில், முகமது-பின்-காசிம் என்ற படைத்தலைவன் இந்தியாமீது படையெடுத்து சிந்துமாநிலத்தைக் கைப்பற்றினான் (கி.பி. 711-712). ஆனால், இவ்வெற்றியின் விளைவாக இஸ்லாமிய சமயம், இந்தியாவில் பரவி நிலைக்கவில்லை. ஏழாம் நூற்றாண்டில் தென்னிந்தியாவின் மேற்கு கடற்கரைப் பகுதிக்கு வந்த முஸ்லிம் வர்த்தகர்கள், பல இந்தியப் பெண்களை மணந்தனர். இந்த திருமணங்கள் வாயிலாகப் பிறந்தவர்களே 'மாப்ளாஸ்' (Moplahs) என்ற பெயருடன் மலபார் பகுதியில் வாழும் முஸ்லிம்களாகும். பதினொன்றாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில் கஜினி நாட்டின் சுல்தான் மகமது இந்தியா மீது பலமுறை படையெடுத்து, ஏராளமான செல்வத்தைக் கொள்ளையடித்துச் சென்றார் (Mahmud of Ghazni) (கி.பி. 1000-1027). கோர் என்ற ஆப்கானியப் பகுதியை ஆண்ட முகமது என்ற சுல்தான் இந்தியாமீது 1192ஆம் ஆண்டில்படையெடுத்து தானேசுவர் (Tarain) என்ற இடத்தில் இராஜபுத்திரர்களைத் தோற்கடித்து இந்தியாவில் முஸ்லிம்களின் ஆட்சியைத் தோற்றுவித்தார் (Mohamnd of ghor). அவருக்குப் பின்னர் அடிமைவமிசத்து அரசர்கள், மற்றும் கில்ஜி,துக்ளக், சயிது, லோடி வமிசத்து அரசர்கள் வடஇந்தியாவை 1206-லிருந்து 1526 வரை ஆண்டனர். அலாவுதின் கில்ஜி தென்னிந்தியா மீது படையெடுத்து மதுரை மாநகர் வரையில் வந்து திரும்பியிருக்கின்றார். துக்ளக்குகளின் ஆட்சி காலத்தில் தக்காணத்தில் முஸ்லிம்களின் ஆட்சி வேரூன்றியது. லோடி வமிசத்தை வீழ்த்திய பின்னர் மொகலாயப் பேரரசர்கள் 1526-லிருந்து, மூன்று நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக இந்தியாவை ஆண்டனர். அக்பர் போன்ற சிறந்த மொகலாயப் பேரரசர் காலத்தில் இந்துக்களும் முஸ்லிம்களும் நட்புறவுடன் வாழ்ந்தனர். இந்திய மறவர் குலமான இராஜபுத்திரர்களும், முஸ்லிம்களும் கலப்பு மணம் செய்து கொண்டனர். மொகலாயப் பேரரசர் அவுரங்கசீப் போன்றோரின் ஆட்சிக்காலத்தில் இந்து - முஸ்லிம் ஒற்றுமை மறைந்தது. இந்துக்கள் வன்முறையால் முஸ்லிம்களாக மதமாற்றம் செய்யப்பட்டனர். அதேபோல தக்காணத்தில் இருந்த முஸ்லிம் அரசுகளும் இந்துக்களை வற்புறுத்தி முஸ்லிம்களாக மாற்றின. இத்தகைய செயல்களால் 'இந்திய முஸ்லிம்கள்' (Indian Muslims) என்ற புதிய பிரிவினர் தோன்றினர். பெரும் பாலரான இந்துக்கள் முஸ்லிம்களாக மாற விரும்பாது மதமாற்றக் கொள்கையினை எதிர்த்தனர். இக்காலத்தில் பக்தி இயக்கம் (Bhakti Movement) தோன்றியது. இராமானந்தர், கபீர் (Kabir) குருநானக் (Guru Nanak) சைத்தன்யர் (Chaitanya) போன்ற தலைவர்கள் தோன்றி இந்துசமயம் மக்களிடையே இழந்த

செல்வாக்கினை மீண்டும் பெற உதவினர். இதனால் இந்துக்கள் தொடர்ந்து தங்களது சாதி, சமயம், வழிபாட்டு முறைகள், ஆகியவற்றுடன் ஒதுங்கி வாழத் தலைப்பட்டனர். முஸ்லிம்களை 'மிலேச்சர்கள்' (Melechchas) என்று தீண்டத்தகாதவர்களைக் காட்டிலும் தாழ்வாக மதிக்க ஆரம்பித்தனர். இஸ்லாமிய சமயத்தின் 'ஒரே கடவுள் கொள்கையும், 'மானிடர் அனைவரும் சகோதரர்களே' என்ற கொள்கையும் இந்துசமய சாதி, கடவுளர் முறைகளுக்கு முற்றிலும் முரணானவையாகும். எனவே இந்து முஸ்லிம் வேறுபாடு வளர்ந்தது. இந்து முஸ்லிம்கள் தனித்து வாழ ஆரம்பித்தனர். நாளடைவில் இஸ்லாமிய புனிதத்துறவிகள் நல்லடக்கம் செய்யப்பட்ட இடங்களுக்கு இந்துக்கள் சென்று வழிபட ஆரம்பித்தனர். பொதுவாக இந்துக்கள் சமயப் பொறையுடையவர்கள். எம்மதத்தையும் இணையானதாக ஏற்றுக் கொள்ளும் சகிப்புத் தன்மையுள்ளவர்கள். இத்தகு சகிப்புத் தன்மையால் முஸ்லிம்களையும் தங்கள் உடன்பிறவாச் 'சகோதரர் களாக பாவித்து ஏற்றுக்கொள்ளத் தொடங்கினர். ஆங்கிலேயருக்கு எதிரான முதல் இந்திய சுதந்திரப் போரிலும் (1857) இந்துக்களும் முஸ்லிம்களும் இணைந்து நின்று போரிட்டனர். ஆனால், அரசியலில் ஏற்பட்ட போட்டியினால் இந்து-முஸ்லிம் கலவரங்கள் ஏற்பட்டன. இக்கலவரங்கள் இந்து-முஸ்லிம் ஒற்றுமையின்மையை வெளிப்படுத்தி, இந்தியா - பாகிஸ்தான் என இருநாடுகளாகப் பிரிக்கப்பட காரணியாயிற்று. சுதந்திர இந்தியா சமய சார்பற்ற அரசியல் கொள்கையைப் பின்பற்றி முஸ்லிம் சகோதரர்களுக்கும் சம உரிமை வழங்கியிருக்கின்றது.

### 4. இந்தியப் பண்பாட்டில்-இஸ்லாமியம்

ஐந்து நூற்றாண்டுகளுக்கும் அதிகமாக இந்திய மண்ணில் அரசோச்சிய முஸ்லிம்கள், காலத்தால் அழிக்க முடியாத எண்ணற்ற பண்பியல் சிறப்புக்களைத் தோற்றுவித்து, இந்தியப் பண்பாட்டியலில் விட்டுச் சென்றிருக்கின்றனர். இந்திய வரலாற்றில் இடைக்காலத்தில் புகழ் மணக்க வீற்றிருந்த முஸ்லிம், மொகலாயப் பேரரசுகள் அழிந்துபட்டாலும், அப்பேரரசுகளால் உருவாக்கப்பட்ட மாடமாளிகைகள், நகரங்கள், கலை அழகு மிளிரும் ஓவியங்கள், போன்றவைகள் அவர்களின் பெருமித வாழ்வை உலகிற்கு அறிவிக்கும் காவியங்களாக, கண்டோரை வியக்கச் செய்யும் கலைக் கருவூலங்களாக, இந்தியமண்ணில் நிலைபெற்று நிற்கின்றன. மக்கள் வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் இஸ்லாமிய நாகரிகம் கலந்துவிட்டிருக்கின்றது. அரசியல், பொருளாதாரம், சமுதாய அமைப்பு, பண்பியல் ஆகிய அனைத்துத்

துறைகளிலும் இஸ்லாமிய நாகரிகத்தின் கைவண்ணங்களைக் காணலாம்.

**அரசியல் :** அரசியலில் முஸ்லிம்கள் அளவிடற்கரிய புதிய முறைகளை, அமைப்புகளை உருவாக்கியிருக்கின்றனர். ஏராளமான சுதந்திர அரசுகளாக, சிற்றரசுகளாக போர் மனப்பான்மைக் கொண்ட பல்வேறு அரசகுலங்களினால் ஆளப்பட்டு வந்த இந்தியாவின் பெரும்பகுதியை வென்று ஒருகுடைக்கீழ் முதலில் கொண்டுவந்த பெருமை முஸ்லிம்களையே சாரும். இந்திய ஒருமைப்பாட்டு எண்ணத்தையும், இந்தியர் அனைவரும் ஒரே இனம் என்ற உணர்வுக்கும் வித்திட்டவர்கள் முஸ்லிம்களே. வடஇந்தியா முழுவதையும், தக்கணத்தையும்கூட வென்று, ஒரேமாதிரியான அரசு நிர்வாக முறையை அப்பகுதிகளில் செயல்படுத்தியவர்களும் முஸ்லிம்களே. பாரசீக மொழியை —ஒரேமொழியை ஆட்சிமொழியாக உயர்த்திய பெருமையும் அவர்களையே சாரும். இந்தியாவெங்கணும் புழக்கத்திலிருந்த பல்வேறு நாணய முறைகளை அகற்றி, ஒரேவிதமான நாணய முறையை புகுத்திய சிறப்பும் முஸ்லிம்களுக்கே உரித்தாகும். மொகலாயர் உருவாக்கி விட்டுச் சென்ற மாநிலம் (Subhas) மாவட்டம் (Zillahs) கோட்டம் (Taluks) போன்ற நாட்டுப் பிரிவினை மாதிரிகள் இன்னமும் வழக்கிலிருக்கின்றன என்பதை அறிவோம். அவர்கள் விட்டுச் சென்ற அரசு அலுவலர்களின் பெயர்களான தாசில்தார், (Tahsildar-வட்டாட்சியாளர்) கோர்ட் (Court-நீதி மன்றம்) பர்ஸார் (Bursar-நிதியாளர்) கஜானா (Kazana-கருவூலம்) ஜமாபந்தி (Zamabandi-நிலவரி வசூல் கணக்குகளைச் சரிபார்த்து அரசுக்குப் பணிந்தனுப்புதல்) போன்றவைகள் இன்றும்கூட அரசு நிர்வாகத்தில் பயன்படுத்தப்படுகின்றது. நிலவரி முறைகள் (Land Revenue System) நீதித்துறை மற்றும் அரசு பணித் துறைகளில் முஸ்லிம்கள் விட்டுச் சென்ற பல அடிப்படை அமைப்புகள் இன்னமும் பின்பற்றப்படுகின்றன. மராட்டியர்களும் (Marathas) இராசபுத்திரர்களும் மொகலாயர்களின் நிர்வாக அமைப்பையும், மற்றும் அரசவை முறைகள், விழாக்கள், உடைகள், அரசர்கள் சூட்டிக்கொள்கின்ற பலவித பட்டப் பெயர்கள், அரசு நெறிமுறைகள் ஆகிய அனைத்தையும் அப்படியே பின்பற்றியிருக்கின்றனர்.

**படைத்துறை :** இந்திய போர்க்கலையில் பலவித உத்திகளையும், படை அணிவகுப்பு, படைக்கலன்கள் மற்றும் படைநடத்துதல், போன்ற அனைத்துத் துறைகளிலும் ஏராளமான புதுமைகளைப் புகுத்தியிருக்கின்றனர். குதிரைப் படைகளைச் சிறப்பாக செலுத்து

கின்ற முறையினையும் சுடுபடைக்கலன்களை (Artillery) திறமை யாகப் பயன்படுத்துகின்ற வழிவகைகளையும் இந்தியருக்கு உணர்த்தினர். யானைப் படைகளின் பயனற்ற தன்மையையும், விரைந்து செல்லும் குதிரைப் படைகளின் உயர்வையும் எடுத்துக்காட்டினர். முஸ்லிம்களின் ஆட்சியின்போது கொஞ்சம் கொஞ்சமாக போரில் யானைகளைப் பயன்படுத்தும் போர்முறை மறைந்தது. வலிவுள்ள மாபெரும் கோட்டைகளை உருவாக்கி, அவைகளைத் திறமையாக பாதுகாக்கும் நுணுக்கங்களையும் மொகலாயர்கள் இந்தியருக்கு கற்றுத்தந்தனர்.

*சமூக-சமயத்துறைகள் :* முஸ்லிம்களின் ஒரு கடவுள் கொள்கையும், வழிபாட்டு முறைகளும், சமய ஆர்வமும், இந்துக்களின் சிந்தனையைத் தூண்டிவிட்டன. இஸ்லாமின் எழுச்சிமிக்க சமய போதனைகள் இந்துக்களை விழிப்படையச் செய்தன. அவர்களின் சமயப் பரப்பார்வம், இந்துக்களுக்கு அச்சத்தையளித்தன. இந்த அச்சத்தின் விளைவாகவும், இந்துக்களிடையே தோன்றிவிட்ட ஏராளமான மூடப்பழக்க வழக்கங்களின் மீது மக்களுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பினை மாற்றி, சமய மறுமலர்ச்சி ஏற்படுத்து கின்ற வகையிலும் இந்தியாவில் 'பக்தி இயக்கம்' தோன்றியது என்பதை முன்னரே கண்டோம். இராமானந்தர், கபீர்தாஸர், குருநானக், சைத்தன்யர் போன்றோர் கணக்கற்ற கடவுளர்கள் இந்துமத வழிபாட்டு முறைகளில் காணப்பட்டாலும், அக்கடவுளர்கள் அனைவரும் ஒரே அம்சத்தின் வெவ்வேறு உருவங்களே என்ற ஒரு கடவுள் தத்துவத்தையும், சாதிகளற்ற சமுதாயம் ஏற்பட வேண்டும் என்ற கருத்தினையும் வலியுறுத்தி, மறுமலர்ச்சிக்கு வழிவகுத்தனர். கபீர்தாசரின் போதனைகளும், குருநானக் தோற்றுவித்த சீக்கிய மதமும் இந்து-முஸ்லிம் சமயக் கோட்பாடுகளின் கலப்பேயாகும். இந்துசமுதாயம் முன்னேற இந்து சமுதாயப் பிணிகளான உடன்கட்டையேறுதல், பால்ய விவாகம், குடிப்பழக்கம் விலைமகளிர் ஆகியவைகளைக் களைந்து, சமுதாயச் சீர்திருத்தம் செய்ய மொகலாய மாமன்னர் அக்பர் முயற்சி எடுத்தார். அக்பரின் இத்தகைய சீர்திருத்தக் கருத்துக்களே இன்றைய சமுதாய சீர்திருத்தவாதிகளுக்கு எடுத்துக்காட்டாக அமைந்திருக்கின்றன. இந்து-முஸ்லிம்கள் சகோதரபாசத்தோடு, சமுதாயத்தில் இணைந்து வாழவேண்டும் என்ற அக்பரின் கனவு, இன்றைய தேசிய ஒருமைப்பாடு என்ற கொள்கையின் அடிப்படையாக அமைத் துள்ளது. தேசிய ஒருமைப்பாடு வெறும் அரசியல் முறைகளாலோ, சட்டங்களை ஆக்குவதன் மூலமோ ஏற்பட்டுவிடாது. மக்களின் இதயங்களில் நாம் அனைவரும் இந்தியரே என்ற எண்ணம் உறுதி

யாக இடம்பெற வேண்டும் (Emotional Integration) என்ற இன்றைய வேட்கை, அக்பரின் உள்ளத்திலேற்பட்ட சமுதாய ஒருமைப்பாடு எண்ணத்தின் மறுபதிப்பாகும். இந்துக்கள், முஸ்லிம்களின் உணவு, உடை, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றில் பெரும்பாலானவற்றை பின்பற்றியிருப்பதையும் நாம் காணலாம்.

பொருளாதாரம் : முஸ்லிம்கள் ஆடம்பரப் பிரியர்கள். ஆடம்பர வாழ்க்கைக்குத் தேவையான பொருள்களை உற்பத்திசெய்ய தொழிற்கூடங்களை (Kharkanas) ஏற்படுத்தியிருந்தனர். ஏராளமான பூ, சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய மிக அழகான ஆடை வகைகள், தங்கம், வெள்ளி, நூல் இடையிட்ட (Brocades) விலையுயர்ந்த ஆடைகள், கண்களைப் பறிக்கும் வண்ணச் சால்வைகள் (Shawls), மஸ்லின் துணிகள், இரத்தினக் கம்பளங்கள்; பலவகையான அணிகலன்கள், பலவகையான (வேட்டெஃகங்கள்) துப்பாக்கிகள், (தகரிகள்) பீரங்கிகள் மற்றும் பல்வேறுபட்ட படைக்கலன்கள், குண்டுகள், பல்வேறு வகையான இசைக் கருவிகள் ஆகிய அனைத்தும் தொழிற்கூடங்களில் (Kharkanas) உற்பத்தி செய்யப்பட்டன.

கலைகள்-பண்பாடு : முஸ்லிம்களின் செல்வாக்கு பண்பாட்டுத் துறையில் மிகவும் அதிகமாகக் காணப்படுகின்றது. நவீனகால இந்திய இசையிலும், இசைக்கருவிகளிலும் முஸ்லிம்களின் செல்வாக்குக் காணப்படுகின்றன. கவாலி (Qawali) (பாட்டிற்கு எதிர்ப்பாட்டு பாடுதல்) துமரி (Thumari- உள்ளத்தை உருக்கும் வகையில் கருத்துகளுக்கும் சொற்களுக்கும் முதலிடம் அளிக்கும் இசையோடு கலந்த பாடல்கள்) மற்றும் 'கசல்' (Ghazal)-ஈரடிகள் கொண்ட இசைப் பாடல்கள்) போன்ற, இசைப் பாடல் வகைகள் மொகலாயர் காலத்தில் புகழ்பெற்றவை. அத்தகைய இசை இன்றும் விரும்பி ஏற்றுக்கொள்ளப்படுகின்றது. இந்துஸ்தானி இசையின் அமைப்பே மொகலாயர் காலத்தில் தோன்றி அவர்கள் ஆதரவுடன் வளர்ந்த கலையாகும். தபலா (Tabala) கித்தார் (Guitar) சாரங்கி (Sarangi) போன்ற இசைக்கருவிகளை மொகலாயர்கள் இந்திய இசைக்கு அளித்தனர். மொகலாயர் காலத்தில் ஓவியக் கலையில் (Painting) புதுமுறைகள் தோன்றின. ஜஹாங்கீரின் காலத்தில்தான் நுண் ஓவியங்கள் (Miniature Painting) முறை மிகவும் சிறந்து விளங்கியது. இந்திய பண்பியல் முறையில் ஓவியங்கள் வரைவது ஆதரித்து வளர்க்கப்பட்டது. இந்து-முஸ்லிம் கட்டிடக்கலையின் கலப்பான இந்திய-சரசனிக் (Indo-Saracenic) கட்டடக்கலை தோன்றி வளர்ந்தது. பதேபூர் சிக்ரி (Fatepur Sikri) நகரில் அக்பர் உருவாக்கிய மாபெரும்

மாளிகைகளும், ஷாஜஹானின் கட்டிடக்கலையின் ஆர்வத்தை உலகிற்கு உணர்த்திப் புகழ்பெற்று நிற்கின்ற டெல்லி செங்கோட்டை (Redfort) அவர் தன்னுடைய கனவினைப் பளிங்கு மாளிகையாக உருவாக்கி, தன்னுடைய மனைவியின் நினைவாக, அழிவற்ற காதல் காவியமாக உலகிற்கு வழங்கியிருக்கும் தாஜ்மஹால் (Taj Mahal) மற்றும் முத்து மசூதி (Moti Masjid) ஜும்மா மசூதி (Jumma Masjid) போன்ற எழில்மிகு கட்டிடங்கள், மொகலாயர்கால கட்டிடக்கலையின் சிறப்புச் சின்னங்களாக வடஇந்தியாவில் இருப்பவை. கோல்கொண்டா கோட்டை (Golconda Fort) ஸ்ரீரங்கப்பட்டிணத்துக் கோட்டை (Fort of Srirangam) பீஜப்பூர் கோட்டையில் வானளாவி நிற்கும் கோல்கும்பா என்ற கோளங்கள் (Golcumba domes) சார்மினர் போன்ற அழகுமிளிர் கோபுரங்கள் (Char-minar) போன்றவை தக்கணத்தில் முஸ்லிம்களின் கலைவனப் பைப் பறைசாற்றிக் கொண்டிருப்பவையாகும். பூங்காக்களும், அவைகளில் உருவாக்கப்படும் நீரூற்றுகளும் மொகலாயர் இந்தியா விற்கு அளித்த கவின் கலைகளாகும்.

மொழி, இலக்கியத் துறையில் இந்தியாவில் முஸ்லிம்கள் ஆற்றியிருக்கும் பணிகளைச் சொல்லில் வடிக்க இயலாது. காகிதம், சித்திர எழுத்துமுறை (Calligraphy) ஒளியூட்டுதல் (Illuminatidn) போன்றவைகள் முஸ்லிம்கள் தமக்குக் கற்றுத்தந்தவைகளே யாகும். அமைதியான அரசியல் சூழ்நிலையும், ஓய்வு நிறைந்த வாழ்க்கையும், இலக்கியத் துறையில் முஸ்லிம்களும், இந்துக்களும் முனைந்து ஈடுபட வகை செய்தன. இந்திய மொழிகளில் இலக் கியம் பெருகத் தொடங்கியது. பக்தி இயக்கம் இலக்கிய வளர்ச்சியை ஊக்குவித்தது. இந்துஸ்தானி, உருது போன்ற கலப்பு மொழிகள் தோன்றி, இலக்கிய வளம்பெற்றுச் சிறந்தன. வரலாற்றுக்குறிப்புகள், வரலாறு எழுதும் முறைகள் கலையாகவே உருப்பெற்றன. அபுல்பசல் (Abul Fazl) பெரிஷ்டா (Ferishta) பதௌனி (Badauni) காஃபிகான் (Khafi Khan) போன்றோர் மிகச் சிறந்த வரலாற்று நூல்களைப் படைத்தனர். பொதுவாக வரலாற்று நூல் எழுதும் முறையே முஸ்லிம்கள் கற்றுக்கொடுத்த கலையாகும். யுனானி வைத்திய முறை (Unani System of Medicine) மொகலாயர்களால் தோற்றுவிக்கப்பட்டதாகும். வானியல் போன்ற அறிவியல் கலைகளுக்கும் முஸ்லிம்கள் பேராதரவு தந்து வளர்த் திருக்கின்றனர். இதுபோன்றே பல்வேறு நிலைகளிலும் முஸ்லிம்கள் இந்திய மக்களுக்கு உருவாக்கித்தந்த முறைகள் இன்றும் என்றும் இறவா நிலைபெற்றிருக்கும் என்பதில் ஐயமில்லை.

## ஏ. சீக்கிய சமயம்

### 1. குருநானக் (Guru Nanak—1469-1538)

குருநானக் என்பவரே சீக்கிய சமயத்தைத் தோற்றுவித்தவர் ஆவார். இவர் கி.பி. 1469ஆம் ஆண்டில், மேற்கு பஞ்சாப்பிலுள்ள 'தல்வாண்டி' (Talwandi) எனும் சிறிய கிராமத்தில் மேத்தா காலு (Mehta Kalu) என்பவருக்கும் திரிப்தா (Tripta) என்ற அம்மையாருக்கும் மகனாகப் பிறந்தார். தனது ஏழாம் வயதில் அவரது கிராமப் பள்ளி ஒன்றில் கல்வி பயிலத் தொடங்கினார். இவருக்குப் படிப்பில் விருப்பமே இருக்கவில்லை. இதனால் ஆத்திரமடைந்த இவரது தந்தை, பள்ளியினின்றும் நீக்கி, ஆடு மாடுகள் மேய்க்கவும், உழவுத் தொழிலைக் கவனிக்கும்படியும் வற்புறுத்தினார். இத்தொழில்களிலும் நானக் அவ்வளவாக அக்கறைக் காட்டியதாகத் தெரியவில்லை. ஆடுமாடுகளை காட்டுக்கு ஓட்டி சென்றவர், காட்டுப் பகுதியின் அமைதியானச் சூழலில் மனதைப் பறிகொடுத்து ஆழ்ந்த சிந்தனை வயப்பட ஆரம்பித்தார். இந்நிலையைக் கண்ட இவரது தந்தை மிகவும் வருந்தினார். விளையாட்டுக்களிலும், கல்வி, தொழில் ஆகியவற்றிலும் அக்கறை காட்டாத பிள்ளையை, பொருளாசையாவது வாழ்க்கையில் ஒருவிதப் பிடிப்பை ஏற்படுத்தாதா என்று நப்பாசையில் இவரை வாணிபத்தில் ஈடுபடுத்தினார். வாணிபத்திற்கு வேண்டிய தனித்தன்மை இவரிடம் இருக்கவில்லை. மிகவும் நேர்மையானவராக இருந்தமையால் இவர் வாணிபத்தில் சிறக்க முடியவில்லை. இவர் ஏழை எளியவர்களுக்குத் தாராளமாக உதவியளித்து வந்தார். பண ஆசையும் இவருக்கு இல்லையென்பது தெளிவாயிற்று. திருமணமும், குடும்ப வாழ்க்கையும் இவருக்கு மனமாற்றம் ஏற்படுத்தி, உலகவாழ்வில் பற்று ஏற்படுத்தும் என்று நம்பிய இவரது தந்தையார், சுலாகினி (Sulakhni) என்ற அழகு நங்கையை இவருக்கு மணமுடித்தார். இரண்டு பிள்ளைகளுக்கு



படம் 12. குருநானக்

தானக் தந்தையான பின்னரும் கூட உலகியலில் பற்று இல்லாத வராகவே இருந்தார். நானக்கின் எண்ணமும் சிந்தனையும் இறைவன்பாலும், சமுதாயத்தில் நிலவிவருகின்ற சமயக் கோட் பாடுகளின்பாலும் நிலைத்து நின்றது. தனது முயற்சிகள் பயனற்ற தான பின்னர் நானக்கின் தந்தையார், இவரை சுல்தான்பூரில் இருந்த தனது மைத்துனரிடம் அனுப்பி வைத்தார். அங்கு 'பொருள் காப்போர்' (Store keeper) பணியில் இவர் அமர்த்தப் பட்டார். நேர்மையுடனும், கடமையுணர்வுடனும் பணியாற்றிய இவர், இடையிடையே தமது சிந்தனை ஓட்டத்தையும் தொடர விட்டார். 1499 ஆம் ஆண்டு பியாஸ் நதிக்கரையில் இயற்கை எழிலுடன், ஆற்றுநீரின் சலசலப்பில் மயங்கி, தன்னை மறந்து ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கியபோது, இவருக்கு ஞானோதயம் ஏற்பட்டது. ஞானோதயம் பெற்ற பின்னர் இவர் தனது 'பொருள் காப்போர்' என்ற மிகச்சிறு பணியை விடுத்து, மக்களை நல்வழிப் படுத்தும் உயர்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொண்டார். துறவறம் மேற்கொண்டார். ஊர் ஊராகத் திரிந்தார். தான் பெற்ற ஒளிமயமான அறிவை மக்களுக்கும் உணர்த்தி, அவர்களை ஆற்றுப்படுத்த முயன்றார். இதன் காரணமாகவே இவர் மூன்று பயணங்களை மேற்கொண்டார். முதல் பயணத்தின்போது அமினாபாத், குருச்சேத்திரம், ஹரித்துவாரம், காசி, காமரூபம் ஆகிய இடங்களுக்குச் சென்றார். தனது இரண்டாவது பயணத்தின் போது தக்கணம், இலங்கைக்கும் சென்று வந்தார். காஷ்மீர் மற்றும் கைலாய மலையில் இவரது மூன்றாவது பயணம் முடிவுற்றது. இந்தியா, இலங்கைப் பகுதிகளில் தான் உணர்ந்த நல்லறிவை விளக்கிய இவர், பாக்தாத், மெக்கா, மெதினா போன்ற அயல் நாட்டுப் பகுதிகளுக்கும் சென்று வந்தார். இவரின் இறுதிப் பயணம் பஞ்சாப் மாநிலத்திலேயே முடிவுற்றது. மொகலாய மாமன்னர் பாபரின் ஆட்சிக் காலத்தில், நானக் அவருடைய சீடரான மார்த்தானாவுடன் (Mardana) கைதுசெய்யப்பட்டார். இவர்கள் 'துறவிகள்' என்றறிந்த உடனேயே விடுதலை செய்யப் பட்டனர். 1538-ஆம் ஆண்டு கர்தார்பூர் (Kartarpur) என்னு மிடத்தில் இவர் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

2. குருநானக்கின் போதனைகள்

குருநானக்கின் போதனைகளே சீக்கிய சமயத்தின் அடிப்படைத் தத்துவங்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. பின்னர் இவரது கூற்றுக்கள், கருத்துக்கள் தொகுக்கப்பட்டு, 'ஆதிகிரந்தம்' (Adigranth) என்று சீக்கியரின் வேத நூலாயிற்று. நானக் பல கடவுளர்களை வணங்கும் வழக்கத்தை எதிர்த்தார். ஒரு கடவுள் கொள்கையை வலியுறுத்தினார். இறைவன் ஒருவனே என்றும்,

அவனது திருநாமத்தை, உள்ளன்போடு, போற்றி, வழிபட, வழிகாட்டும் குரு ஒருவரின் உதவியையும் நாடவேண்டும். இறைவன் எங்கும் நிறைந்தவர், எதிலும் இருப்பவர். எவ்வழியிலும் அவரை வழிபடலாம். ஆண்டவன் அழிவற்றவர். அனைத்திலும் நிறைந்து நிற்பவர். உன்னிலும் இருக்கின்றார். உலக மக்கள் ஒவ்வொருவரிடத்திலும் குடிகொண்டிருக்கின்றார். யார் ஒருவன் ஆண்டவனின் திருப்பாதங்களில் முழுமையான அன்போடு சரணடைகின்றாரோ, அவருக்கு ஆண்டவனின் அருள்கிட்டும். மந்திரமாக அவனது திருப்பெயரை திரும்பத்திரும்ப உச்சரிப்பதன் மூலமாக அவனை வழிபடலாம். உலக வாழ்க்கைக் கடலிலிருந்து மீண்டு, இம்மை மறுமையை அறுத்து, நிலைபேறுமிக்க நிவாரணம் பெற முயற்சிக்கும்போது ஏற்படுகின்ற இன்னல், இடையூறுகளை அகற்றும் சக்தியை இறைவனது திருப்பெயரைத் திரும்பத் திரும்ப உச்சரிப்பதன்மூலம் ஒருவன் அடையமுடியும். இவ்வனைத்தும் பெற, சமயப் போதகரோ, அன்றி ஒரு குருவோ நிச்சயமாகத் தேவைப்படும் என்றார். குருவின் துணையின்றி, ஆண்டவன் அருளைப்பெற இயலாது என்பதனையும் வலியுறுத்தினார். இறையருளாலேயே ஒருவன் சிறந்த குருவையும் அடையமுடியும் என்றார்.

குருநானக் உருவ வழிபாட்டையும், பொருளற்ற சமயச் சடங்குகளில் ஈடுபடுவதையும் கண்டித்தார். புனிதப் பயணத்தாலும், புண்ணிய நீராடல்களினாலும், எவரும் முக்திபெறமுடியாது என்றார். ஆண்டவனின் அருட்பெயரைத் திரும்பத் திரும்ப தியானிப்பதன் மூலமே ஒருவன் மனது தூய்மையடைய முடியும். மிகைப்பட்ட உணர்ச்சி வேகம் (Passion) கோபம் (Anger) பேராசை (Greed) பாசம், பந்தம் (attachment) பொறாமை ஆகிய அனைத்து உலகியல் நிலைகளும், களையப்படல்வேண்டும். இந்துக்களின் சாதி முறைகளையும் கடுமையாகச் சாடினார். 'சிக்' (Sikh) என்ற வார்த்தையின் பொருளே 'சீடன்' ஆகும். சீக்கியர்கள் சாதி பாகுபாடுகளை விடுத்து அனைவரும் சமபந்தியாக உணவருந்த வேண்டும் என்றார். அவ்வழக்கமே 'அனைவரும் சமபந்தியாக உணவருந்தும் பொது இடம்' (Common Kitchen) என அழைக்கப் பட்டது. இராமன் என்றாலும், இரஹிம் என்றாலும் ஒன்றே என்றார் நானக். எனவே இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் உள்ள வேற்றுமைகள் கற்பனையே என்று வாதிட்டார். 'எல்லோரும் ஓரினம்' எல்லோரும் ஓர்குலம், எல்லோரும் ஒரு கடவுளின் குழந்தைகளே, எனவும் அறிவுறுத்தினார். 'இராமர்', 'கிருஷ்ணர்', 'விஷ்ணு' ஆகிய இந்து கடவுளர்களுக்கும் மேலானவரே 'இறைவன்' என்றார். ஆண்டவனை வழிபடுவதைத் தவிர்த்து

ஆண்டவனின் அவதாரங்களை வழிபடுவதை நானக் கடுமையாகக் கண்டித்தார். வேதங்கள் மற்றும் சமயத்தின் விளக்கங்களெனப் படும் இந்துசமய நூல்களின் கூற்றுப்படியே வழிபாடு செய்வதே இறைவன் திருவடிகளை அடைய உன்னத வழி என்ற கூற்றினை மறுத்தார். இத்தகைய புரட்சிகரமான போதனைகளால், குருநானக் ஒரு புதிய சமயத்தையே தோற்றுவிக்க நாட்டம் கொண்டு விட்டாரென, பழமையில் மூழ்கிய இந்துக்களாலும், மற்றையோ ராலும் கடிந்துரைக்கப்பட்டார். இத்தகைய புரட்சிக் கருத்துக் களின் மூலம் இந்து வழிபாட்டு முறைகளையும், கடவுளர்களையும் குறைகூறுவதாகவோ, அல்லது எள்ளி நகையாடுவதாகவோ கருதவேண்டியதில்லை. "இந்துக் கடவுளர்களே அனைத்தும்" என்னும், அக்கடவுளர்களை வழிபட வேதங்கள் கூறும் வழிகளை யுமே அவர் எதிர்த்தார். அதே வேதங்களும், சமயநெறி நூல்களும் கூறும் அறிவுரைகளை அவர் அப்படியே ஏற்றுக்கொண்டார். அவர் ஒரு சமய சீர்திருத்தவாதியே ஆவர். இந்துசமயத்தில் நுழைந்துவிட்ட கண்மூடித்தனமான மூடப்பழக்க வழக்கங்களையும், சாதிபாகுபாடுகளையும் களைந்து, இந்து சமுதாயத்தைச் சீர்திருத்தம் செய்யவே எண்ணினர். காலப்போக்கில் அவரது கொள்கை யைப் பின்பற்றுவோர், சீக்கியத்தை ஒரு தனித்த சமயமாகவே உயர்த்திக் கொண்டனர்.

### 3. சீக்கிய சமய வளர்ச்சி

குருநானக் இரண்டு பிள்ளைகளைப் பெற்றிருந்த போதிலும், அவர்களில் எவரையும் தனது வாரிசாக நியமிக்கவில்லை. மாருக 'அங்காத்' (Angad. 1538-52) என்பவரையே தமது வாரிசாக நியமித்தார். தனது குருவின் வாழ்க்கை வரலாற்றையும், போதனை களையும் அங்காத் அவர்கள் தொகுத்து நூலாக வெளியிட்டார். அவர் கட்டுப்பாடு, மற்றும் ஒழுங்கு முறைகளை வகுத்து சீக்கியர் களைப் பின்பற்றச் செய்தார். சீக்கியர்களிடையே ஒருமைப் பாட்டினை ஏற்படுத்தினர். புதிய அகரவரிசையைக் கண்டுபிடித்து, அதற்கு 'குரு முக்தி' (Guru Mukti) எனப் பெயரிட்டு, மக்க ளிடையே பரப்பினர் மொகலாய மன்னன் ஹுமாயூன் இவரை நாடி, ஆசிபெற்றார்.

குரு அங்காத் அவர்களின் மறைவிற்குப் பின்னர் அவருடைய விருப்பத்திற்கிணங்க, அமரிதாஸ் (Amar Das—1552-74) என்பவர் சீக்கியர்களின் குருவானர். குருநானக், மற்றும் 'அங்காத்' அவர்களின் பிள்ளைகள், அமர்தாஸர் குருவானதை எதிர்த்தனர். ஆனல், சிறிது காலத்திற்குள் அவர்களது எதிர்ப்புகள் மறைந்தது. குரு அமர்தாஸர் பல புதிய சீர்திருத்தக் கருத்துக்களையும், நெறி

